நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும்


# இயலிசை

தனி பிரதி விலை 50 காசுகள்
ஆண்டு சந்தா ரூ 10/-
அரையாண்டு சந்தா ரூ. 5/-

சிறப்பாசிரியர் :
சிதம்பரம் S மீனாட்சிசுந்தரம்

துணை ஆசிரியர் :
V. தமிழ்ராசன்

'இயலிசை'
57, தெற்கு சிவன் கோயில் தெரு,
கோடம்பாக்கம், சென்னை-24

6

மலர் 1 — 15-4-82 இசைக்கலை உலக தமிழ் மாதமிருமுறை — இதழ் 4, 5


# கலைஞர்களே! ரசிகப்பெருமக்களே!

### உங்கள் அனைவருக்கும் எங்கள் பணிவான வணக்கங்கள்

உங்களுக்கென்று துவக்கப் பெற்ற 'இயலிசை' இதழ் உங்கள் கரங்களிலே தவழ்ந்து கொண்டிருக்கின்றது. இது முதல் இதழ்தான் என்றாலும் ஒரு முன்னோடி. இதழ் எனவே எடுத்துக் கொள்ளுங்கள் அடுத் தடுத்த இதழ்களில் பல அம்சங் களும் நிறைந்து 'இயலிசை' பூரணமாக ஒலிக்கும்.

சங்கீதகாரனுக்கு என்று ஒரு சஞ்சிகை இல்லையே ஏன் நாம் ஒன்று துவக்கக்கூடாது என்று பலரிடம் கருத்துக்கள் கேட் டோம். இசைத்துறையில் உள்ள சிலர், பத்திரிக்கை வேண்டும் என்பது உண்மைதான் ஆனால் சங்கீதக்காரர்கள் எதற்கும் ஒத்து வரமாட்டார்களே'' என்று சொன்னார்கள் நாங்கள், ''கலைஞர்களை மட்டும் நம்பி ஆரம்பிக்காமல், ரசிகப் பெரு மக்களையும் நம்பி ஆரம்பிக்கின் ளோம்'' என்றோம். ''நடத்துங் கள்'' என்றனர்.

சில பத்திரிக்கைக் காரர்கள் ''பாலுணர்ச்சி SEX அரசியல் பத்திரிக்கைகளுக்குமே போதிய ஆதரவு வருமானம் இல்லையே நீங்கள் இசைக்கலையினை மட்டும் வைத்து எப்படி நடத்தப் போகின்றீர்கள்'' என்று கேட்ட னர். ''இலாப நோக்கம் இல்லா மல் சேவை நோக்கையே கருதி நடத்தலாம் என்று இருக்கின் ளோம்''. இது எங்கள் பதில் ''முயன்று பாருங்கள்'' இதுவே அவர்கள் ஆசி எவ்வாறு இருப்பி னும் தமிழ்த்தாய்க்கு, இசைக் கலைக்கு நாங்கள் செய்யும் தொண்டாக இது அமையட்டும் என்று துணிந்து துவக்கியுள் ளோம், துவளாமல் காப்பது உங்கள் கடமை.

அறிஞர் அண்ணா மேடைத்தமிழை வளர்த்ததுபோல்
ஆதித்தனார் பத்திரிகை தமிழை வளர்ந்தது போல
கலைஞரும் கவிஞரும் திரைக்கலைத் தமிழை வளர்த்ததுபோல
தமிழக இயல்பான இசைதனை • இசைத்தமிழை
'இயலிசை' வளர்க்கும்

—ஆசிரியர்

## ''வளர்க இயலிசை''

இனிய புத்தாண்டில் ''இயலிசை'' எனும்
இவ்விதழை மாதமிருமுறையே
இந்நாட்டு மக்களறிய – இசைக்கின்ற
இசைச் செல்வன் மீனாட்சி சுந்தரமே !
இவருடனே இணையாசிரியராம்
இத்தமிழ்ராசன், இணையிலா பணி புரிந்து
''இயலிசை'' இனிதே வளர்ந்து
இப்புவியினிலே இசைக்கலை பொங்கவே !

ஆக்கியோன்
**இனியகோதையன்**

## 'இயலிசை'க்கு கலைஞர்கள் என்ன செய்யவேண்டும் ?

உங்கள் விலாசங்களையும் தொழில் விபரங்களையும் உங்கள் இயலிசைக்கு தெரிவியுங்கள், சந்தா செலுத்தி உறுப்பினராகுங்கள். நீங்கள் கலந்து கொள்ளும் கலை நிகழ்ச் சிகள் விபரங்கள் தெரிவியுங்கள் இதர கலைஞர்களுக்கும் விபரம் சொல்லுங்கள்.

## இயலிசையில் கேள்வி பதில்

இயலிசையில் அடுத்த இதழிலிருந்து கேள்வி பதில் பகுதி ஆரம்பிக்க உள்ளது. இதில் இசைக்கலை நடனக்கலை, கலைஞர்கள் பற்றி சகல கேள்விகளும் கேட்கலாம். தக்க கலை வல்லுநர்களைக் கொண்டு பதில் அளிக்க உள்ளோம். தயவு செய்து அரசியல், சினிமா நடிக, நடிகையர் பற்றி கேள்விகள் கேட்க வேண்டாம்.

—ஆசிரியர்.

## திருவாவடுதுறை T. N. இராசரத்தினம் பிள்ளை கச்சேரி இசைச் சுட்டி!

### 'எக்கோ' கம்பெனி வெளியீடு

மறைந்த மாமேதை நாதசுரச் சக்ரவர்த்தி திரு. T. N. இராச ரத்தினம் பிள்ளையவர்கள் செய்த கச்சேரி ஒன்றினை இசைச் சுட்டி யாக Cassette திரு. T. R. விசுவ நாதன் 'எக்கோ' கம்பெனி வெளி யிட்டுள்ளனர். இதற்கான உதவி களை அவரது மகள் திருமதி T. N. R. வனஜா சுப்ரமணியம் செய்துள்ளார், 'எக்கோ' திரு. T. R. விசுவநாதன் ஏற்கெனவே பல இசைச் சுட்டிகளை வெளியிட் டுள்ளார். இசைத்தட்டு, இசைச் சுட்டி விற்பனையாளர்களிடம் பெறலாம்.

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

## 'இயலிசை' வாழ்த்துக்கள்

● இலங்கை நாட்டின் மட்ட களப்பு நகரில் இசைக் கல்லூரி ஆரம்பிக்கப்பட்டு அதன் முதல்வ ராக வீணைக் கலைஞர் திரு. K. P. சிவானந்தம் நியமிக்கப்பட்டுள் ளார். இவர் தமிழக அரசவைக் கலைஞரும் ஆவார். தஞ்சை பொன்னையா பிள்ளை என்ற நாட்டிய மேதை குடும்பத்தில் வந்தவர். இவருக்கு இயலிசை யின் வாழ்த்துக்கள் !

● இந்தியாவில் இவ்வருட சிறந்த பாடகராக திரு. S. P. பாலசுப்ரமணியம், தேர்ந்தெடுக் கப்பட்டு குடியரசுத் தலைவர் விருது பெற்றுள்ளார், இவர் தமிழ், தெலுங்கு, இந்தி மற்றும் பல மொழிப் படங்களில் பாடி வருகின்றார். இவருக்கும் 'இய லிசை'யின் வாழ்த்துக்கள் !

● சென்னை வானொலி நிலையம் விவிதபாரதியில் 'தேனிசை' என்ற நிகழ்ச்சியை 10 நிமிடங் களிலிருந்து 30 நிமிடங்களாக்கி தினமும் காலை 8 மணிக்கு ஒலி பரப்புகின்றனர். இதனால் காலை யில் நல்ல நேரத்தில் நல்ல துதிப் பாடல்களை கேட்க முடிகின்றது. நிலைய இயக்குநர் திரு. E. கோவிந்தராசன் அவர்களுக்கு எங்கள் வாழ்த்துக்கள் !

❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋❋

## 'தமிழிசை மணி' தி. சா. சுந்தர ஓதுவா மூர்த்திகள் நினைவு மலர் 1981

இவர் சுமார் 50 ஆண்டுகளுக்கு முன் திருநெல்வேலியில் வாழ்ந்த தமிழ்ப் புலவர். தேவார திரு முறைப்பதிகங்களும், பண்டைத் தமிழ்ப்பண்களும் மீண்டும் உயிர்பெறச் செய்த பெருமைக்கு உரியவர். தமிழில் பேசும் படங் கள் தயாரிக்கப்பட்ட ஆரம்ப காலத்தில் வெளிவந்த 'பட்டி னத்தார்' 'நந்தனார்' ஆண்டாள் திருக்கல்யாணம்' சுந்தரமூர்த்தி நாயனார் போன்ற பக்தி படங் களிலும் நடித்துள்ளார். இவர் அக்காலத்தில் ஏராளமான இசைத் தட்டுக்கள் பாடியுள் ளார். இசை உலகில் புகழ்பெற்ற திரு. M. M. தண்டபாணி தேசி கர், காஞ்சிபுரம் சாரங்கபாணி செட்டியார், சங்கரன் கோவில் திருஞானசம்பந்த ஓதுவா மூர்த்தி, பூவாளூர் திருஞான சம்பந்தமூர்த்தி ஆகியோரும் இவருடன் இருந்து தேவார இசைக்கு தொண்டாற்றிய வர்கள்.

(தொடர்ச்சி 4ம் பக்கம்)

ஓம் முருகா



# கந்தனருட்சங்கம்

13, ரங்கராஜுலு தெரு,
அமைந்தகரை, சென்னை-600 029

## முதலாண்டு தொடக்கச் சித்திரைக் கிருத்திகைப் பெருவிழா நிகழ்ச்சிகள்

(திருபோரூர் - 24, 25 ஏப்ரல் 82)

| | |
|---|---|
| இடம் | : திருப்போரூர் கந்தசாமி திருக்கோயில் மண்டபம் |
| காலம் | : 24—4—82 சனிக்கிழமை பரணியன்று |
| மாலை 4 மணி | : நாதசுர இன்னிசை சைதை திரு சுப்ரமணி குழுவினர் |
| 6 மணி | : தேவார திருப்புகழ் இன்னிசை செல்வி K. பத்மாவதி குழுவினர் |
| 6-30 மணி | : விழாத்தொடக்கம் |
| விழாத்தலைவர் | : **உயர்திரு V. பாலசுப்பிரமணியம்** அவர்கள் (உயர்நீதிமன்ற நடுவர்) |
| வரவேற்புரை | : திரு T. S. மோகனரங்கம் (கந்தன் அருட் சங்க தலைவர்) |
| வாழ்த்துரை | : திரு ரா. நடராசன் (ஸ்ரீ நடராசா கல்வி கழகம், சென்னை-5) |
| | திரு அரு. கலைநம்பி (செயலர் வள்ளலார் சன்மார்க்க சங்கம், திருவண்ணாமலை) |
| | திரு ப. ராமகிருஷ்ணன் (செயல் அலுவலர் அருள்மிகு கந்தசாமி திருக்கோயில் திருப்போரூர்) தவத்திரு தியாகராய சுவாமிகள், |
| சிறப்புரை | : திருக்குறளார் **திரு V. முனுசாமி** அவர்கள் |
| ஆசியுரை | : **ஸ்ரீலஸ்ரீசிதம்பர சிவஞானசுவாமிகள்** (பரம்பரை ஆதின தர்மகர்த்தர் அருள்மிகு கந்தசாமி திருக்கோயில் திருப்போரூர்) |
| நன்றியுரை | : செயலர் கந்தன் அருட்சங்கம் |
| இரவு 9 மணிக்கு | : **புரசை திரு E. அருணகிரி** குழுவினர் இன்னிசை |
| 10-30 மணிக்கு | : **சிதம்பரம் திரு S. மீனாட்சிசுந்தரம்** குழுவினர் தேனிசை |
| நன்றியுரை | : திரு T. S. நாகலிங்கம், பொருளாளர் |

25—4—82 ஞாயிற்றுக்கிழமை கிருத்திகையன்று
காலை 6-30 மணி திருவீதி வழிபாடு : பங்கேற்கும் சபைகள்

1. கந்தன் அருட்சங்கம், சென்னை-29
2. குன்று தோறாடல் முருகன் திருப்புகழ் இன்னிசைக்குழு, சென்னை-38.
3. ஸ்ரீ சித்தாதிரி விநயகர் தமிழ்வேத பாராயண சபை, மாணம்பதி.
4. ஸ்ரீமத் சிதம்பர சுவாமிகள் தேவார திருப்புகழ் சபை, திருப்போரூர்.

காலை 8 மணிக்கு கருத்தரங்கம்: திருப்போரூர் சந்நிதிமுறை 'மாலை

கலந்து கொள்வோர் :

| | |
|---|---|
| திரு சுப்புபெருமாள் | திரு தா. பெரியாண்டவன், M.A. |
| திரு அ. சீநிவாசன் | திரு தி. இராசகோபாலன், M.A. |
| திரு ந. மாசிலாமணி | பக்தமணி V. இராஜேந்திரன் |
| திரு கூ. ப. இந்துசேகரன் | திரு D. சிவக்குமார் |

பகல் 1 மணி இசையரங்கம் துவக்கம்

| | |
|---|---|
| | திரு பால்ராஜ் திரு B. பாலசுப்ரமணியம் குழுவினர் இன்னிசை |
| 2 மணி : | திருமுருக கிருபானந்த வாரியார்? ... |
| 3 மணி : | காயகப்ரவீணஜெயராமன் குழுவினர் இன்னிசை |
| 4 மணி : | திரு C. N. சம்பந்தம், B.A. ,, திருப்புகழிசை தி V. S. பாலசுப்ரமணியம் |
| 5 மணி : | நெய்வேலி திரு G. ராஜரத்தினம் குழுவினர் இன்னிசை |
| 6 மணி : | காஞ்சிபுரம் **திரு ஆ. விநாயக முதலியார்** குழுவினர் தேவார இசை |
| 7-30 மணி : | **திருமதி T. பவானி அம்மையார்** செல்வியர் S. நர்மதா, S. சுமித்ரா, B.Sc. குழுவினர் இன்னிசை |
| 9 மணி : | **திரு E. J. மாதவன்** குழுவினர் இன்னிசை |
| நன்றியுரை : | D. சிவக்குமார், துணை செயலாளர் |

## இலங்கை உலக இந்து சமய மாநாட்டில் கலை நிகழ்ச்சிகள்

### தமிழக கலைஞர்கள் இலங்கை செல்கின்றனர்

முதலாவது உலக இந்து சமய மாநாடு இம்மாதம் 21ந் தேதி முதல் 25 தேதிவரை இலங்கையில் கொழும்பு நகரில் நடக்கிறது. மாநாடு நடக்கும் 5 நாள் கலை நிகழ்ச்சிகளை இலங்கை அமைச்சர் திரு இராசதுரை ஏற்பாடு செய்துள்ளார் இலங்கை கலைஞர்களும் இதில் கலந்து கொள்ளுகின்றனர்.

நாதசுரக் கலைஞர் நாமகிரிப் பேட்டை கிருஷ்ணன் நாட்டிய கலைஞர்கள் சொர்ணமுகி, பத்மா சுப்ரமணியம் இசைக்கலைஞர்கள் சீர்காழி கோவிந்தராஜன் சூலமங்கலம் சகோதரிகள் சிதம்பரம் மீனாட்சி சுந்தரம் ஆகியோர் கலை விருந்து அளிக்கின்றனர். சினிமா இசை அமைப்பாளர் இளைய ராஜா குழுவினரும் பாடுகின்றனர்.

## "என் கடன் பணி செய்து கிடப்பதே"

**இசைக் கலைஞர்களே !**

உங்களில் பலர் தொழில் வல்லுனராக இருந்தும் கிணற்றுத் தவளைகளாக இருக்கின்றீர்கள் என்பதனை நீங்கள் உணர வேண்டும். 'இயலிசை' இசைத் துறை, தொழில் மேடை Market எவ்வாறு உள்ளது அதற்கேற்ற வாறு நாமும் எவ்வாறு தொழில் அமைத்துக் கொண்டு சிறக்க வேண்டும் என வழிகாட்டுகிறது. இளம் தமிழ்க்கலைஞர்களை ஊக்குவிக்கஎன்றும் இயலிசை தயங்காது !

கலைஞர்கள் அனைவரும் தங்கள் பெயர் விலாசங்கள் தெரிவியுங்கள் நிகழ்ச்சிகளும் 'இயலிசை' வாயிலாக உங்களுக்கு கிடைக்கலாம்.

**ரசிகப் பெருமக்களே !**

உங்களுக்கும் உங்கள் அபிமான கலைஞர்களுக்கும் இடையே இது ஒரு தொடர்பு சாதனம். உங்கள் ரசனையை திருப்திபடுத்தும் வகையில் உள்ள பல கலைஞர்கள் எங்கேயோ தக்க ஆதரவு இன்றி இருக்கின்றனர். தமிழகமெங்கும் நடக்கும் முக்கிய இசை நிகழ்ச்சிகள் பற்றிய விபரம் இதில் வந்து கொண்டிருக்கும். இயலிசை வாயிலாக அவர்களை தெரிந்து கொள்ளுங்கள்.

**SABHAS**

**இசை மன்றங்களே**

உங்கள் ஆதரவுதான் எங்களுக்கு மிகவும் தேவை. உங்கள் நிகழ்ச்சிகளை எங்களுக்குத் தெரிவியுங்கள். இயலிசையில் செய்தியாக வெளிவரும். முதலில் நீங்கள் சந்தாதாரராக சேர்ந்து மற்ற கலைஞர்களுக்கு, ரசிகர்களுக்கு வழி காட்டுங்கள்.

**இசைத்தட்டு. இசைச்சுட்டி (கேசட்) வெளியீட்டாளர்களே**

நீங்கள் வெளியிடும் இசைத் தட்டு, இசைச்சுட்டி (கேசட்) விபரங்களை எங்களுக்கு தெரிவியுங்கள் - ரசிகப்பெருமக்களுக்கு அறிவிக்கிறோம்.

**திருக்கோயில் நிர்வாகிகளே !**

உங்கள் திருக்கோயில் விழாக்களில் நடைபெறும். கலை நிகழ்ச்சிகள் விபரங்களை அனுப்புங்கள்- செய்தியாக இயலிசையில் வெளியிடுகின்றோம்.

நாட்டில் நடக்கும் கலை நிகழ்ச்சிகள் பற்றியும், வெளியிடும் திரைப்படங்களில் உள்ள இசையமைப்பு பற்றியும், நடனக் கலைஞர்கள், இசையமைப்பாளர்கள் இவர்களைப்பற்றியும் குறிப்புகள் இடம் பெறும்.

—ஆசிரியர்

## விழுப்புரம் இலட்சதீபப் பெருவிழா

### இசை நிகழ்ச்சிகள்

இவ்வாண்டும் வழக்கம்போல் விழுப்புரத்தில் அருள்மிகு ஆஞ்சநேயர் திருக்கோயிலில் தமிழ் புத்தாண்டு ஏப்ரல் 14 தினத்தன்று இலட்சதீபப் பெருவிழாவும் ஏப்ரல் 19 அன்று தெப்பத் திருவிழாவும் நடைபெற உள்ளது இசை நிகழ்ச்சிகளும் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது.

ஏப்ரல் 14 - சிதம்பரம் திரு S. மீனாட்சிசுந்தரம் குழுவினர்

,, 15 - திரு T. M. செல்வகுமார் குழுவினர் மெல்லிசை

ஏப்ரல் 16 - சுதா ஆர்ட்ஸ் குழுவினர் மெல்லிசை

,, 17 - திரு B J. மாதவன் குழுவினர்

,, 18 - A. M. ராஜா & ஜிக்கி குழுவினர்

தவிர விழா நாட்களில் திரைப் படப்புகழ் திரு கலைமணி குழுவினர் கரகம், காவடி, கிராமிய நடனங்களும் நடைபெறும். விழா ஏற்பாடுகளை பரம்பரை அறங்காவலர் திரு V. கனகசபை கவனித்து வருகின்றார்.

## சேலம் T. L. நாகேந்திரன் மகன் திருமணம்

### இயலிசையின் வாழ்த்து !

சேலம் செவ்வாய்ப்பேட்டை திரு T. L. நாகேந்திரன் என்றால் தெரியாத இசைக்கலைஞர்கள் தமிழகத்தில் இருக்க முடியாது. பல கலைஞர்களுக்கும் சேலம் மாவட்டத்தில் நிகழ்ச்சிகள் ஏற்பாடு செய்து தரும் இசை நிகழ்ச்சி அமைப்பாளர் அவர் அவரது மகன் T. L. N. பாஸ்கரனுக்கும், செல்வி ராஜராஜேசுவரிக்கும் வரும் ஏப்ரல் 18 அன்று திருமணம் நடைபெற உள்ளது. மணவிழாவிற்கு K.M தெட்சிணாமூர்த்தி, K. M. உத்திராபதி சகோதரர்கள் நாதசுரம் வாசிக்கின்றனர் ஏப்ரல் 19 அன்று நடைபெறும் வரவேற்பு விழாவில் நியூ லிட்டில் வெஸ்டர்ன் மியூசிக் குழுவினர் மெல்லிசை விருந்து அளிக்கின்றனர். மணமக்களுக்கு இயலிசை சார்பில் வாழ்த்துக்கள்.



## நேரிசை வெண்பா

எல்லாரும் நாடும்
''இயலிசை''யாம் இவ்விதழை
நல்லார்வம் கொண்டு
நடத்துபவர் - பல்லாண்டு
வாழ்ந்திடுக மக்களெலாம்
வாழ்ந்திடுக புத்தாண்டில்
ஆழ்ந்த கலையுணர்வினால்

ஆக்கியோன்,
**"அப்பா" பி. எஸ். வேங்கடாசலம்**
திரைப்பட நடிகர்
நெ. 15, வேங்கீஸ்வரர் கோயில், சன்னதி தெரு,
வடபழனி, சென்னை-600 026

## இன்றைய இசையின் மரபு

### டாக்டர் எஸ். இராமநாதன்

செந்தமிழ் நாட்டில் பிறக்கும் பேறு பெற்ற நாம், ஒரு மாபெரும் இசை மரபிற்குச் சொந்தக்காரர்களாக இருக்கிறோம். இன்று உலக இசை ஹார்மனி, மெலடி என்ற இருபெரும் பிரிவுகளில் அடங்கும். முன்னது மேனாட்டினாலும், மெலடி அல்லது பண்ணிசை கீழ்த்திசை நாடுகளிலும் வழங்குகின்றது. பண் முறை தமிழகத்தில் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன்னரே நல்ல வளர்ச்சியுற்று மேம்பாடுற்றிருந்து.

திருக்குறளில் பண் ஓர் எடுத்துக்காட்டாக ஆளப்பெற்றிருக்கிறது. 'பண் என்னும் பாடற்கு இயைபு இன்றேல், கண் என்னும் கண்ணோட்டம் இல்லாத கண்.'

முத்தமிழ்க் காப்பியம் என்று போற்றப் பெறும் சிலப்பதிகாரத்திலிருந்து தமிழ் நாட்டின் பண்டைய இசை பற்றிய பல செய்திகளை அறிகின்றோம். குரல் துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி, தாரம் என்பன ஏழிசைகளின் பெயர்கள் என்றும், அவற்றை வட்டப்பாலையில் நிறுத்தும் மரபு (தொன்றுபடு முறை) இருந்தது என்றும் அறிகின்றோம். இன்னும் ஒலிக்கிரமம் குரல் திரிபு போன்ற பல இசை நுணுக்கங்களைப் பற்றி அறிகின்றோம்.

''நாட்டிய சாஸ்திரம்'' இயற்றிய பரத முனிவர், ''விந்திய மலைக்கும் தென்கடலுக்கும் இடையிலுள்ள தென்னாட்டார், பாட்டிலும், பல இசைக் கருவிகள் வாசிப்பதிலும், கூத்திலும் மிக்க திறமை வாய்ந்தவர்கள்'' என்று வியந்து போற்றியுள்ளார்

இவ்வளவு தொன்மை வாய்ந்ததோர் மரபையுடைய தென்னாட்டிசையின் வரலாற்றைப் பல காலப் பகுதிகளாகப் பிரித்துக்காணலாம்.

சங்க காலம், கி. பி. இரண்டாம் நூற்றாண்டு வரை : முல்லை குறிஞ்சி, மருதம், நெய்தல், பாலை ஆகிய ஐவகை நிலங்களுக்கும் உரிய பண்ணும், யாழும், பறையும் இருத்தன. பரிபாடல் பண்ணோடு அமைந்த இசைப் பாடல்களைக் கொண்டது. யாழ், குழல், தண்ணுமை, முதலிய பல இசைக்கருவிகள் வழங்கி வந்தன.

தேவார, திவ்வியப் பிரபந்த காலம் (7, 8, 9ஆம் நூற்றாண்டுகள்) : தேவாரத்தில் அக்காலத்திலிருந்த 103 பண்களில் 23 பண்கள் பயன்படுத்தப்பெற்றன அக்காலத்தில் ராஜராஜசோழன் என்ற ஒரு மகராஜன் செய்த ஏற்பாட்டினால் அப் பண்முறை இன்றளவும் ஓதுவா மூர்த்திகளால் காக்கப்பெற்று வந்துளது திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களும் பண்ணோடு பாடப் பெற்றவையே அம்மரபு 12ஆம் நூற்றாண்டு வரை இருந்ததாக அறிகிறோம்.

11ஆம் நூற்றாண்டு: திவாகரம் பிங்கலத்தை ஆகிய நிகண்டுகளில் ஏழிசைகளின் பெயர்கள், அவற்றின் குறியீடுகள், மாத்திரைகள், 103 பண்களில் பெயர்கள் முதலிய பல குறிப்புகள் கிடைக்கின்றன.

13ஆம் நூற்றாண்டு : சாரங்க தேவர் சங்கீத ரத்னாகரம் என்ற நூலில் தேவாரப் பண்கள் பலவற்றைக் குறிப்பிடுகின்றார். ''தேவாரவர்த்தனி'' என்றே ஒரு இராகம் காணப்படுகின்றது அந்நூலில் 264 இராகங்களைப் பற்றி அறிகிறோம்.

.5ஆம் நூற்றாண்டு : திருவண்ணாமலையில் தோன்றிய அருணகிரிநாதர் சந்தத்தை அடிப்படையாகக் கொண்டு தம் திருப்புகழ் பாடல்களை இயற்றினார். அதுவரை வழக்கிலில்லாத பல தாளங்களை அவர் பயன்படுத்தினார்.

அதேகாலத்தில் கர்நாடகத்தில் தோன்றிய புரந்தரதாசர் கன்னட மொழியில் பல தேவர் நாமா என்னும் பாடல்களை இயற்றினார்.

17ஆம் நூற்றாண்டு : விஜய நகரப் பேரரசு ஓங்கி இருந்த காலத்தில் தஞ்சையும் மதுரையும் தெலுங்குமொழி பேசும் நாயக்க அரசர்கள் ஆளுகைக்கு உட்பட்டன. விஜயராகவநாயகக் காலத்தில் க்ஷேத்ரக்ஞர் ஆந்திர நாட்டிலிருந்து தஞ்சை வந்து தெலுங்குப் பதங்களை இயற்றினார்.

18-ஆம் நூற்றாண்டு : அருணாசலக் கவிராயர் இராம நாடகக் கீர்த்தனைகளை இயற்றினார். முத்துத்தாண்டவர் தமிழில் கீர்த்தனைகளையும் இயற்றினார்.

18-ஆம் நூற்றாண்டின் : பிற்பகுதியில் சியாமாசாஸ்திரி தியாகராஜர், தீட்சிதர் ஆகிய மூவரும் திருவாரூரில் பிறந்தாகள். தீட்சிதர் வடமொழியிலும் தியாகராஜர் தெலுங்கிலும், சியாமாசாஸ்திரி தெலுங்கு, வடமொழி, தமிழ் ஆகிய மூன்று மொழிகளிலும் கீர்த்தனைகள், இயற்றினார். இவர்கள் காலத்திலேயே கனம் கிருஷ்ணையர், சுப்பராம் ஐயர் தமிழில் பதங்கள் இயற்றினார்,

19-ஆம் நூற்றாண்டு : கேரளத்தில் சுவாதித்திருநாள் வடமொழி, மலையாளம், தெலுங்கு ஹிந்தி முதலிய பல மொழிகளில் இயற்றினார். கவிகுஞ்சர பாரதி, வேதநாயகம் பிள்ளை, இராமலிங்க அடிகளார், ஆனை ஐயா, மகாவைத்தியநாத ஐயர் கோபாலகிருஷ்ணபாரதி, அண்ணாமலை ரெட்டியார் முதலிய பலர் தமிழில் பாடல்கள் இயற்றி இசையை வளப்படுத்தினர்.

20-ஆம் நூற்றாண்டு: நீலகண்ட சிவன், கோடீசுவர ஐயர் சுப்பிரமணியபாரதி, பாபநாசம் சிவன் மாயூரம் விசுவநாத சாஸ்திரி, இலட்சுமணப் பிள்ளை, முத்தையா பாகவதர் முதலிய பலர் தமிழில் பாடல்கள் இயற்றி இசைத்தமிழை வளப்படுத்தியுள்ளார்கள்.

தமிழ், தெலுங்கு, கன்னடம், மலையாளம், ஆகிய நான்கு மொழிகளும் வழங்கும் தமிழ் நாடு, ஆந்திரா, கர்நாடகா கேரளம் ஆகிய நான்கு நாடுகளிலும் வழங்கும் இசை, பண்டைத் தமிழ்கத்தின் இசையின் தொடர்சியே என்பது கண்கூடு.

இன்று தென்னாட்டில் வழங்கும் இசை, இரண்டாயிரம் ஆண்டுகளாகத் தொடர்ந்து வளர்ந்து வரும் ஓர் இசை மரபைக் கொண்டது. என்று உணரும்போது நாம் இறும்பூது எய்துகிறோம்.

இத்தகையதொரு மரபினுக்குச் சொந்தக்காரர்களாய் நாம் இருப்பது பற்றிப் பெருமை அடைகிறோம்.

[சென்றாண்டு தமிழிசைச்சங்க தலைமையுரைப் பகுதி]

### 'இயலிசை' விளம்பரக் கட்டணம்

| | |
|---|---|
| முழுப்பக்கம் | ரூ. 300/- |
| அரைப்பக்கம் | ரூ. 150/- |
| கால் பக்கம் | ரூ. 75/- |
| கலர் விளம்பரம் | 10% கூடுதல் |
| இசை நிகழ்ச்சிகளுக்கு | 20% தள்ளுபடி |

'Iyalisai' musical Bi-Monthly, Edited & Published by M. Lakshmi, 57, South Sivan Koil Street, Kodambakkam, Madras-24 and Printed by T. Thirunavukkarasu at Jayalakshmi Art Printers, 29, Kavarai Street, Vadapalani, Madras-26

T.N./M.S./57/266

# சென்னை

## திருமயிலைத் திருக்கபாலீசுவரர்

## பங்குனிப் பெருவிழா

### விடாயாற்றி கலைவிழா இசை நிகழ்ச்சிகள்

| [illegible] | இரவு | | | |
|---|---|---|---|---|
| 10 | 7 மணி | லால்குடி M. சுவாமிநாதன் திருமறையரங்கு | | |
| | 9 மணி | திரு. M. S. விசுவநாதன் குழுவினர் மெல்லிசை | | |
| 11 | 7 மணி | திரு. T. K. S. கலைவாணன் | ,, | இன்னிசை |
| | 9 மணி | திரு. B. R. இராசகோபாலன் | ,, | ,, |
| 12 | 7 மணி | திரு. S. இராமகிருஷ்ணன் | ,, | ,, |
| | 9 மணி | டாக்டர் சேலம் S. ஜெயலட்சுமி | | ,, |
| 13 | 7 மணி | திருமதி G. சரஸ்வதி குழுவினர் | | ,, |
| | 9 மணி | திரு. V. கோவிந்தசாமி நாயக்கர் சுரேஷ்பாபு | | வயலின் இசை |
| 14 | 7 மணி | பாபநாசம் திருமதி ருக்மணி ரமணி குழுவினர் | | இன்னிசை |
| | 9 மணி | திரு. B. ராஜம் அய்யர் | ,, | ,, |
| 15 | 7 மணி | வள்ளியூர் R. குருமூர்த்தி | ,, | ,, |
| | 9 மணி | சூலமங்கலம் சகோதரிகள் | ,, | ,, |
| 16 | 7 மணி | குமாரி சரஸ்வதி | ,, | வீணை |
| | 9 மணி | சீர்காழி திரு. கோவிந்தராசன் | ,, | இன்னிசை |
| 17 | 7 மணி | திருமதி குன்னக்குடி பாலா | ,, | ,, |
| | 9 மணி | டாக்டர் மதுரை S. சோமசுந்தரம் | | ,, |
| 18 | 7 மணி | திருமதி T. V. சுந்தரவல்லி | ,, | ,, |
| | 9 மணி | திரு. கங்கைஅமரன் | ,, | மெல்லிசை |
| 19 | 7 மணி | திரு அ வேலாயுதம் | ,, | தேவார இசை |
| | 9 மணி | திரு K. வீரமணி, ராதா &சோமு | ,, | மெல்லிசை |

கலை நிகழ்ச்சிகள் ஏற்பாடுகளை திரு. மா. து. குப்புசாமி முதலியார் திருக்கோயிலின் அறங்காவலர் குழுத்தலைவர் ஆர்வத்துடன் சிறப்பாக அமைத்துள்ளார்.

## காலம் திரும்புகின்றது !

தமிழ்த்திரை உலகில் ஆரம்ப காலத்தில் அழகுள்ள பாடகர்களே திரைப் படங்களில் நடித்து வந்தனர். மீண்டும் தற்பொழுது பாடகர்களுக்கு நடிக்க வாய்ப்புகள் வந்துள்ளன. மதுரை T. N. சேஷகோபலன் என்ற பிரபல பாடகர் 'தோடி' என்ற திரைப்படத்தில் நடிக்கின்றார். 'ராணி தேனி' என்ற புதிய படத்தில் பிரபல பின்னணி பாடகர் தீபன் சக்ரவர்த்தி கதாநாயகனாக நடிக்க உள்ளார். இவருக்கு ஜோடியாக நடிகர் A.V.M. ராஜன் - புஷ்பலதா இவர்கள் மகள் மகாலட்சுமி, 'ஸ்ரீ' என்ற பெயரில் நடிக்கின்றார்.

திரை உலக திருப்பத்திற்கு இயலிசையின் வாழ்த்துக்கள் !

(1ம் பக்கத் தொடர்ச்சி)

இவரது நினைவில் மலர் ஒன்றினை இவரது மகன் திரு. தி. சு. செந்தில் ஆறுமுகம் மிகவும் சிறப்பாகத் தொகுத்து சென்னை தமிழிசைச் சங்கம் மூலம் வெளியிட்டுள்ளார் மலரில் இசையன்பர்கள் தெரிந்துகொள்ள வேண்டிய ஏராள கருத்துக்கள் உள்ளன. இயலிசையில் அவ்வப்போது வெளியிட உள்ளோம் தவிர இவர் தமது தந்தையார் பெயரில் தமிழிசைச் சங்கம் ஒன்றினையும் கோவை மாவட்டம் உடுமலைப்பேட்டையில் நடத்தி தொண்டாற்றி வருகின்றார். வளர்க அவரது ஆர்வம்! வாழ்க அவர் தந்தையார் திருநாமம் !



"இசைச்செல்வன்" சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம் பாடி திரை இசை அமைப்பாளர் ஸ்ரீகுமார் இசையமைத்துள்ள

## 'திருஅருட்பா தேனிசை' இசைச்சுட்டி (காசட்) வெளியீட்டு விழா

17—4—82 சனிக்கிழமை மாலை 6 மணியளவில் சென்னை-3, அருள்மிகு கந்தசாமி திருக்கோயில் நூல் நிலைய மெத்தை மண்டபத்தில்

**திரு P. பாலசுப்ரமணியம், B.Sc.**

(அறங்காவலர் குழுத்தலைவர், அருள்மிகு கந்தசாமி திருக்கோயில்) அவர்கள் தலைமையில் நடைபெறும்

**வாழ்த்துரைகள்**

திரு மு. பாலசுப்ரமணியம் (சமரச) சுத்த சன்மார்க்க சங்கம் வேளாள தேனாம்பேட்டை)

திரு T. S. மோகனரங்கம் (தலைவர் கந்தன் அருட்சங்கம், சென்னை-29)

தவத்திரு தியாகராய சுவாமிகள்

திரு B. துரைராஜ், ACTO (சமரச சுத்த சன்மார்க்க சங்கம் எம். ஜி ஆர். நகர் மற்றும் பலர்



## 'தமிழிசையில் திரு அருட்பா'

தமிழில் இசை வழங்கும்போது மூன்று வகையாக வழங்கலாம். பாடல் வகை-இன்று கீர்த்தனம் என்று சொல்லப்படுகின்றது. இவ்வகையில் பாடல்கள் தாளத்துடன் பாடபட்டாலும், பண் வடிவிற்கே முதலிடம் தரப்படுகின்றது. இக்காலத்தில் சங்கீத உலக மொழியில் கூறினால் லயத்தைவிட இராகத்திற்கே—பாடாந்திரம் இதற்கே முதன்மையான இடம் தரப்பட்டது. பலவகையான பாடல்கள் இருப்பினும் இவ்வகைக்கு தலையாய நிற்பது தேவாரமே அதனால் தான் பழம் பண்களை தேவாரத்தினை ஆராய்ந்து காண்கின்றன.

இரண்டாவது விருத்தம் பகுதி அதாவது தாளம் இல்லாமல்-சொற்களை சுத்தமாக பண்ணில் கலந்து பாடுவது. இவ்வகைக்கு முதலிடம் உணர்ச்சிக்கு - கருத்துக்கே தரப்படுகின்றது. அக்காலத்தில் இவ்விருத்த வகையில் பல பாக்கள் பாடப்பெறினும் பிள்ளைத் தமிழே தலையாய இருந்தது. திருவாசக, தேவாரத்திலும் சில பாக்கள் இதற்கு ஏதுவாக இருக்கின்றன என்றாலும் திருஅருட்பா பாடல்களை வள்ளலார் வழங்கியபின் திருஅருட்பா பாடல்களே இன்று உருகிப் பாடும் விருத்தங்களுக்கு விளங்குகின்றது. கீர்த்தனைப்பகுதி ஒன்று அருட்பாவில் இருப்பினும் விருத்தங்கள் வகையே அதிகம்.

மூன்றாவது சந்தப்பகுதி இது பண்ணுக்கு முதன்மை இடம் வழங்காது தாளத்திற்கே லயத்திற்கே முதல் இடம் அளிப்பது. பலவிதமான தாளங்களை கையாள வழிவகை செய்வது முன்னவர் பலவிதமான பாடல்கள் இருந்தது எனினும் இன்று சந்த பகுதிக்கு இசை வாணர்கள் அதிகம் எடுத்து கையாளுவது திருப்புகழே சிந்து வகையான காவடிச்சிந்து முதயன இரண்டாவது இடம் பெறலாம்.

திருஅருட்பா விருத்தப்பகுதியில் தமிழிசையில் சிறந்து விளங்க சில காரண காரியங்களும் உண்டு. ''திருவாசகத்துக்கு உருகாத'' நெஞ்சை உருக்கும் வாசகம்'' என்பன திருவாசகத்திற்கு ஆன்றோர்கள் கொடுத்த சிறப்பு மொழிகள் திருஅருட்பா அத்திருவாசகத்தின் மரபுடையது என்பது அய்யாவின் வாக்கிலேயே வந்த உண்மை. சென்ற நூற்றாண்டில்தான் வள்ளலார் வந்தவர். எனவே அவர் கையாண்ட தமிழ் வார்த்தைகள்-உரைநடை இன்றும் வழக்கில் உள்ளது தவிரசுலபமான அழகிய வார்த்தைகளையே பெரும்பாலும் அய்யா எடுத்துள்ளார். இதனால் பாவணர்கள் தாங்களும் பொருள் விளங்க பாடி மக்களும் அறிந்துகொள்ள வைக்கின்றனர்

அய்யா அவர்கள் சன்மார்க்கத்திற்கு தொண்டு செய்ததுடன் சங்கீதம்-குறிப்பாக தமிழிசைக்கும் தொண்டு செய்துள்ளார்.

வாழ்க அவர் நாமம் !

(சிதம்பரம் S. மீனாட்சிசுந்தரம்)